# வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அருளிய (வானுமாமலை சிவன் பதிகம்)

## நாங்குநேரி சிவன் பதிகம்

### திருச்சிற்றம்பலம்

#### காப்பு

நல்லோரை ஆதரிக்கும் நாங்குநேரி சிவனே!
வல்லோர் மிக பரவும் வள்ளலே!- எல்லோரும்
கொல்லா விரதம் கொடு வாழ நாடும் என்னை
கல்லாற் கீழ் தொண்டரோடு கா.

#### நூல்

மேகம் புரையும் விதரணத்தோர் காணா மெய்
தாகம் புலர்த்தத் தயங்கும் என்னைத் தாங்காயோ?
பாகம் புணரும் பசும் கொம்பு உடையோனே!
நாகம் புனைந்து உவப்பாய் ! நான்குநேரிச் சிவனே (1)

மஞ்சுண்ட கூந்தல் மடநல்லார் வாஞ்சை முற்றிக்
கெஞ்சுண்ட வாயால் கிளத்தும் என் சொல் கேளாயோ?
பிஞ்சுண்ட கோணல் பிறை சூடும் சென்னி எந்தாய்!
நஞ்சுண்ட ஆரமுதே ! நான்குனேரிச் சிவனே (2)

சுந்தரன் போல் வாழத் தொடர்ந்து ஆளவாறு அறிந்தும்
செந்தமிழால் போற்றும் இச்சை தீர்ந்திலேன் என்றருள்வாய்?
கந்தரத்தில் என்பு அணிந்தாய், கங்காளம் தோளில் இட்டாய்
நந்து அசையும் காதுடையாய்! நான்குநேரிச் சிவனே (3)

செங்கை விரித்து ஏற்றுத் தியங்கும் சிறியேனே
அங்கை மலர்ச் சங்காழி ஆயன் என வைப்பாயோ?
கங்கை அணி சென்னி கருணைப் பெருங்கடலே!
நங்கை உமைப் பங்கு அமர்ந்தாய்! நான்குநேரிச் சிவனே (4)

சேல்வாய்த்த கன்னார் திருட்டு ஊடல் தீர்த்து ஓர் அன்பன்
மால் வாங்கு பாடலோடு என் வாக்கு அணியும் நாளிலையோ?
பால்வார்த்த செம்பொற் பருப்பதமே! போல நின்று ஓர்
நால்வாய் உரிப் போர்த்தாய் ! நான்குநேரிச் சிவனே (5)

பம்பு கடலுடுத்த பார்மகள் கோ என்று அலற
வெம்பு துயர் செய்வாரை வென்று உவக்கும் வீறு அருவாய்
செம்புனலோடு ஏந்தி திரிந்து உலகம் வாழ வைத்தாய்!
நம்பும் அவர்க்கு எளியாய் ! நான்குநேரி சிவனே (6)

வாசவன் தன் வாழ்வை மதியா மதி அளித்தும்
நீசர் கருங்குடைகீழ் நின்று உள் ஓல்கக் கண்டது என்னோ?
பேசரிய ஆய அண்ட பிண்டம் முற்றும் மாய்ந்தாலும்
நாசம் உறா முன்னவனே ! நான்குநேரிச் சிவனே (7)

அன்று வில் கொண்டு ஓங்கி அடித்தாற்கு ஓர் அம்பு அளித்தாய்
இன்று துதிக்கின்றேற்கு இரங்கா விதம் யாதோ?
மன்றுடைய மாமணியே! மால் அயன் கண் காண்பறியாய் !
நன்று உணரச் செய்யும் எந்தாய்! நான்குநேரிச் சிவனே (8)

பெய்வளைக்கை பார்ப்பதியால் பிள்ளை இரண்டும் பெற்றும்
மெய் வகுத்து போற்றும் என்னை வேண்டா வெறுப்பு ஏதோ?
தெய்வமுற்றும் நீ எனவே தேர்ந்து இறைஞ்சும் சீரியர்க்கே
நைவு அகற்றும் தாள் பரமா! நான்குநேரிச் சிவனே (9)

சொல் இறந்து நின்ற உன்னை சூலன் கபாலன் ஒரு
வல்லி பங்கன் என்ன வழுத்தி உய்ந்த நால்வர் ஒப்பக்
கல் இதயத்து யானும் கழறுகின்றேன் கைத்தகற்றேல்
நல் இணர்ப் பூங்கொன்றை நம்பா ! நான்குநேரிச் சிவனே (10)

வேதாந்த மோன விளக்கு ஒளியாம் மெய்ப்பொருளை
நாதாந்த தேசிகனாம் நான்குநேரி சிவனை !
எதாந்தம் வேண்டும் எழிலார் திருப்புகழோன்
போதாந்தத்தால் துதிக்கை போற்றும் அவர் புண்ணியரே (11).

**திருச்சிற்றம்பலம்**

**நாங்குநேரி சிவகாமி அம்பாள் சமேத திருநாகேஸ்வரர்**
**பொற்பாதங்கள்! "போற்றி போற்றி"**